உ

கடவுள்துணை.

பதினெண்சித்தர்களில்

மகா மருத்துவம் பொருந்திய

# தேரையர் வயித்திய காவியம்,

௩௱.

இஃது.

மதுரை - புதுவை - சென்னை இச்சங்கங்களில்

தமிழ்த் தலைமைப் புலமை நடாத்திய.

களத்தூர்.

வேதகிரி முதலியார் - குமாரர்

ஆறுமுக முதலியார்.

ஆயுள்வேத பாஸ்கரன்

கந்தசாமி முதலியார்.

இவ்விருவர்களால் பற்பல ஏட்டுப்

பிரதிகளைக்கொண் டாராய்ச்சிசெய்த - பிரதிக்கிணங்க.

க. ம. பச்சையப்பநாயகரவர்களால்.

வெண்பேடு.

கோவிந்துநாயகரவர்களது

சென்னை - சூளை.

வேதவிநாயகர் - அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1894௵.

உ

சிவமயம்.

# தேரையர் சரித்திரம்.



தெய்வீகத் தன்மை பொருந்திய அகஸ்திய முனிவர் தன்னருள் ஞானோபதேசங்களைத் தனக்குத் தக்க சிஷனொருவனுக்குப் போதிக்க வேண்டு மென்று கருதி யிருந்ததால் அவரொற்ற ஒரு நாளில் அக்கருதியை நினைந்து ஊமைப்பிள்ளையா யிருந்தால் மெத்தநலமென் றெண்ணி பொதியை விட்டு தங்கிஊருக்குட் பிரவேசமானார், அப்போது அருள் தங்கிய ஔவை யென்பவள் இவர் வருஞ் செய்தியறிந்து முற்பிறப்பில் இராமதேவ ரென்றும், யாக்கோபென்றும் பெயர் தங்கிய இருவரையும் அழைத்து அப்பா மைந்தர்களே அகஸ்திய மகா முனிவர் தன்னுடைய ஞானோபதேசங்களை ஓர்நற்சிஷனுக்கு போதிக்கவேண்டுமென்று நினைத்து வருகின்றார். ஆனதால் அவரிஷ்டப்படி முடிக்க வுபாய தந்திரங்கள் கூறுகிறேன். அதென்னெனில் அவர் ஊமைப் பிள்ளை வேண்டு மென்று விரும்புவதால் உங்களிருவரில் மூத்தவனாகிய இராம தேவனென்பவனை உன்னை மந்திரோப தேசத்தால் ஊமையாக்கி வைப்பேன், நீயுமவனமுற்றிரு அவர் வந்தழைப்பார் உன்னைக் கொடுத்து விட்டுப் பொன்னைப் பெற்றுக் கொள்ளுகிறேன் நீ அவர்பின் சென்று அவருக்குத் தொண்டு செய்து சகல கலையுமறிந்து சிலகாலங் கழித்து வருக வென்று வரங் கொடுத்தாள். அப்படியே அகஸ்தியரும் உடனே அழைத்துக் கொண்டு சென்றனர் பின்னிருவரும் அவர் சொற்படி பொதிகையில் அவர் செய்யும் கிரியைகள் சகலமு மறிந்து இருவருந்தெரியாதவர் போலிருந்தார் இப்படி யிருக்குங் காலத்தில் சங்கப்புலவர்களில் நக்கீர ரென்பவருக்கு பத்து வருஷகாலமாய் தலைநோக்காடு கண்டு மெத்தவும் துன்பப் படுகிறதை அவரது சிஷர் நச்சினார்க் கினியார் அகஸ்தியரை யழைத்துக் கொண்டு சங்கத்திற்குச் சென்றனர். இவர் மருந்துப்பையும் கத்திரிக் குறடா சிமிட்டாக்களுடன் அவ்விடஞ் சென்றனர். அச்செய்தி சிஷனாகிய இராமதேவனுந் தெரிந்து கொண்டு அவரும் பின் தொடர்ந்தனர் உடனே அகஸ்தியரும் தலைநோக்காடுடைய நக்கீரருக்குத் தலைகிறிமூளையைப் பற்றிக் கொண்டிருக்கிற தேரையை சிமிட்டாக்கொண்டு தூக்கப் போனார் அதுமோசம் வருமென்றெண்ணி அப்போது சிஷனாகிய இராமதேவர் தடுத்தனர். அப்போது அகஸ்த்தியரும் கையசைந்தனர் உடனே ஊமையாகிய இராமதேவர் கைசாடை கண்சாடையால் ஓர் பெரிய தாம்பாளத்தில் ஜலங் கொண்டு வரச் சொல்லி பக்குவமாய்த் தாம்பாளத்தைக் காண்பிக்க தேரையானது மூளையை விட்டுத் தண்ணீ

ரில் குதித்தது. அப்போது இராமதேவர் குருவுக்குமுந்தின சீஷனானார். இவ்வா
று பலபுத்திகளை அகஸ்தியர் கண்டு மெத்தவுஞ் சந்தோஷித்து இன்னம் தெரிக்
தும்தெரியாத விஷயங்களையும்போதித்தார். உடனேதேரையவைத்தியஞ்செ
ய்ததால் இராமதேவர் என்ற பெயரை நீக்க தேரையர் என்று பெயர்கொடுத்
தனர் இப்படியிருக்க இவர் இறுமாப்பு கொண்டு அனேக சரக்குகளையும் நாக
மலை பொன்மலை பித்தளைமலை வெள்ளிமலை கந்தகமலை தாளகமலை இப்படியாகக்
கொத்த அற்புதங்களை மானிடர் பிழைக்கவென்று உண்டாக்கினார். பின்னும்ஆ
யிரத்தெட்டு மாற்றுடைய தங்கமலை நிர்மிக்க வேண்டுமென்று நினைத்து அனே
கதபோதனர்கள் சித்தர்கள் முனிவர்கள் வாசஞ்செய்யும் படியான நாகலாவர
மலையென்று சொல்லப்பட்ட மலைமுழுதும் மூலிகைகளினால் சாற்பிழிந்து மலை
முழுதும் பூசி இரட்டைத் துருத்தி கொண்டு ஊதத்தொடங்கினார். அந்ததீயா
க்கினியானது சித்தர்முனிவர்கட்குச் சகிக்கமுடியாமல் அகஸ்தியருக்கு முறை
யிட்டனர் என்னையா; என்குருவே? தேரையனென்பவனுக்கு தாங்கள் ஞா
னோபதேசமும் சர்வவித்தைகளும் போதித்ததால் லோகமெல்லாம் சித்தாய்
ப் போய்விடும். மலைமேற்சிகரம் வரையில் இவன் மீட்டுந் தீபாக்கினி யானது
நிர்வகிக்கக் கூடாதென்று கூறினார்கள். உடனே அகஸ்தியருங் கோபங்கொ
ண்டு இவரை இரண்டாக் கிழித்தெறிந்து பொதிகைக்குப் போயினர். உடனே
இவரது விசுவாசம்பெற்ற இரண்டுசிஷர்க ளங்கிருந்தனர் முன்தேரையனென்
பவர் தன்குருவால் தனக்கிடையூறு வருமென்றெண்ணி சஞ்சீவியாகிய உயிர் மூ
லிகையை அவ்விருவருக்குமருளிச் செய்திருந்தார் உடனே அச்சிஷர்களிருவருங்
கும் இருப்பாகிடாயிருந்த தேரையனென்பவரை யொன்றாகச்சேர்த்துமூலிகை
பிழிந்தனர் அவரும் உயிர்த்தெழுந்தனர் பின்னும் அநேகஅற்புதங்களை லோகத்து
மானிடர்களுக்கு விளைவித்தனரென்று பெரும்பாலும்பெரியோர்களால் கேள்வி
யுற்றோம் மேற்கூறிய இராமதேவர் யாக்கோபு என்பவருடைய சரித்திரவரலா
றை அவர்கள்செய்த நூலின்முகவுரையில் பார்த்தால் தெரியவரும் இச்சரித்தி
ரத்தை இந்நூல்திருத்திய ஆயுர்வேத பாஸ்கரன் கந்தசாமிமுதலியாரால் கே
ள்வியுற்ற வரையில் அச்சிடத்துணிந்தனர்.

தேரையர் சரித்திரவரலாறு

முற்றுப்பெற்றது.





உ

கடவுள் துணை.

பதினெண் சித்தர்களில் மகாமகத்துவம் பொருந்திய.

# தேரையரென்பவர்

திருவாய் மலர்ந்தருளிய

பெருநூலாகிய

# வயித்திய காவியம்

ருரு ௱.

காப்பு,

அண்டரண்டமாகி நின்றவையர்காப்பு
வானந்தக்கடலிலுள்ள வுமையேகாப்பு
சண்டமெனும்சரஸ்வதியின் தாயேகாப்பு
தனிவேலர்தாள்பாத மடியேன்காப்பு
தண்டரிகமானதிரு குமரவேள்தன்
சற்குருவின்திருமாலு மிடையேகாப்பு
கண்டமெனுந்தேரையன் வயித்தியகோர்வை
கருத்துடனேசாற்றுகிறேன் றெளிந்துபாரே. (க)

பாரேநீநிறைந்தபரா பரனேபோற்றிப்
பாடுகிறேன்வயித்திய காவியத்தை
வாரமுடனுயிரத்து அஞ்ஞூறுக்குள்
வாகானசெந்தூரம் லேகியபற்பம்
காரேநீதயிலமோடு கிருதமெண்ணெய்
கருவானவாக்கிராணக் கலிக்கமாத்திரை
சூரேதான்மெழுகோடு தபதங்கப்போக்கும்
சுளுவாகாசாயனமுஞ் சூட்டினேனே. (உ)

## (நூலாரம்பம்.)

### சுரத்திற்கு குளிகை.

காப்பாமேகசுரத்துமருந்துகேள்
சேப்பாமினகுசிறந்தவுளுந்துடன்
வேப்பாமெருக்கன்விரும்பும்பாலாட்டியே
பாப்பான்கெவுரியும்பாங்காகக்கூட்டிடே. (௧)

கூட்டுமெழுகாய்க்குலாவியுரைத்துமே
நீட்டுமாத்திரைநிழலிலுலர்த்தியே
காட்டுதேனிற்கலந்துவருந்தவே
பூட்டுமேகசுரமோடிப்போகுமே. (௨)

போகும்பத்தியம்பொன்னாங்கண்ணிக்கீரை
ஆகுங்கத்திரியானமுருங்கையும்
ஏதும்பச்சைப்பயறுடன்வள்ளியும்
பாகுமிஞ்சியின்பச்சடியுண்டிடே. (௩)

### சந்திக்கு மேற்பூசும் தயிலம்.

உண்டிடேசன்னிக்குத்தயிலமொன்று
விண்டிடேதேரையன்சொல்லுறுதிமெய்
அண்டிடுவேப்பெண்ணெய்யரைபடிவிதம்
கண்டிடுங்கலப்பைக்கிழங்குகூட்டிடே. (௪)

கூட்டுநாபிக்குலவும்வசம்புடன்
நீட்டுமவெள்ளுள்ளிக்காயம்விராகனும்
ஆட்டுவோமயஞ்சானசதகுப்பை
மூட்டும்வெந்தயமூன்றுவிராகன்சேர். (௫)

சேர்த்துச்சாதிக்காய்சிறங்கபழச்சாற்றில்
பார்த்துமைபோல்பதமாயரைத்தெடு
நீர்த்துமெண்ணெயில்நோய்க்கலக்கியே
பார்த்துமேகடுப்பத்திலிறக்கிடே. (௬)

இறக்கியெண்ணெயயிசைந்தமேனிற்பூச
முறக்குஞ்சந்நியுமயன்றவலிசுப்பு
பிறக்கும்வாதப்பெருங்குடைச்சல்நோயும்
பறக்குமென்றல்லோபாடினன்தேரனே. (௭)

தேறன்சொல்மொழிதிசையெட்டுக்குஞ்சரி
கூறநாவுகிடையாதுசித்தர்க்கு
வேறவாகடமேவண்டுமோவேந்தர்க்கு
திறயெங்கித்திரியாதேமாந்தரே. (௰)

சூதகக்கட்டுக்கு-உப்பு.

மாந்தரேகேளுமங்கையர்சூதகம்
போந்துடையவேபூட்டிடேனுப்பொன்று
சாந்துகொந்திச்சாற்றிலாட்டியே
மோந்துபில்லையாம்மேலிடத்தட்டிடே. (௰௧)

தட்டியோவிதாக்குடன்காயவை
எட்டெருவினிசைவாய்ப்புடம்போட
சுட்டுவெப்புக்கலங்கியேபற்பமாம்
ஒட்டடையுப்புத்தேனிலருந்திடே (௰௨)

அருந்திடவின்னம்அறியவொருபாகம்
செருந்திப்பைச்செருப்படைசாற்றினில்
பொருந்தபத்துமேசாமமரைத்திடு
குருந்தபில்லையுங்குடோரிசிறமாமே. (௰௩)

சிறமாய்பில்லையைநிழலிலுலர்த்திடு
உறமாய்க்குக்குடவுற்றபுடம்போடு
திறமாய்வெந்துமேதோந்தகவளம்போல்
பறமாய்நீறியேபற்பமாகுமே. (௰௪)

ஆகும்பற்பத்தையாவின்நெய்யிற்கொடு
ஏகும்சூதகம்ரத்தம்வெளிப்படும்
நீகும்வாதக்குடைச்சலும்நீங்கிடும்
போகும்பத்தியம்பூணுறுப்பாகாதே. (௰௫)

ஆகாதப்பாஅடவாளவென்றுள்ளிச்
சாகத்தயிலஞ்சுடுதியில்த்தான்வடி
வாகாத்துட்டெடைவாங்கிடுமூன்றுநாள்
பாகாயுப்பினைப்பார்த்துவருந்திடே. (௰௬)

அருந்துபத்தியமானபருப்பொடு
இருந்துபச்சையரிசிசமனதாய்

பொருந்துமேபுனற்பாகமாய்க்காச்சியே
தெருந்துவைத்துநாள்தோர்ந்துமேயுண்டிடே. (௰எ)

பெரும் பாடுக்குதூர் மருந்து.

உண்டிடும்பெரும்பாடுவந்தோர்கட்கு
பிண்டிடுநாவற்பட்டைபிழுந்துமே
கண்டிடுந்தேவதாரம்விராகனுற்
கொண்டிடுபுளிமோரில்கொடுத்திடே. (௰அ)

கொடுத்திடப்பாகுறையாமல்மூன்றுநாள்
எடுத்திடும்பெரும்பாடுவெங்கேபோச்சு
கடுத்திடுங்காலைக்கடிகையருந்திட
படுத்திடும்பத்தியமுந்தானில்லையே. (௰௯)

அஷ்டகுன்மத்திற்குஉப்பு.

இல்லையேவஷ்டக்குன்மவியாதிக்கு
தில்லையாடுஞ்சிவன்பதஞ்சாட்சியாய்
வெல்லுந்தேறையன்வேந்தற்குரைக்கிறேன்
நல்லஉப்புமேநாழியெடுத்திடே. (௨௰)

எடுத்துஉடுப்பையெருமைமோர்தன்னுடன்
வடுத்திடுவரிக்குமட்டிச்சாறெண்பலம்
தொடுத்திடும்வெடியுப்புமேகாற்பலம்
வடுத்திடும்வளையலுப்புநாலதே. (௨௧)

நாலதாய்ச்சவுட்டுப்புமேநாற்பலம்
மேலதான்பிந்துப்புமேவெண்பலம்
கோலமாயிதைகுறித்திடும்பாண்டத்தில்
காலமோருங்கலந்துவடுப்பேற்றே. (௨௨)

ஏற்றியக்கினிறித்தியெடுமோர்சாமம்
சாற்றுமுப்பதுசர்க்கரைபோலாகும்
டோற்றியயீசனைபொருந்தத்துதித்துமே
ஆற்றிச்சிமிழிலடக்கங்கள்செய்திடே. (௨௩)

செய்துகாலைசிறந்தவுதையாதி
எய்துமன்னநீரிளநீரில்தன்னிலே

கொய்துமுப்பைக்கொடுத்திடவிராகன்கால்
தொய்துமண்டலந்துனிவாயரிந்திடே. (உச)

அருந்திடக்கட்டியாம்பல்பொருமலும்
செரிந்திடும்சோகைசெனித்திடுகிரிச்சியும்
கெரிந்திடுங்கவுணசக்கெண்டைவாயுவும்
சொரிந்திடும்குலைவக்கட்டியுநீங்குமே. (உரு)

(நீரடைப்புக்குவாழைக்கிழங்கின்நீர்)
நீங்குமுப்பினுல்நீரடைப்புபோகும்
பாங்குங்கதலிப்பரிவாங்கிழங்கையும்
ஓங்கிவெட்டிடவுச்சிதநீர்வரும்
ஆங்குநீரிலரைப்படிதானெடே. (உசு)

எடுத்திடும்வெடியுப்புவிராகன்கால்
கொடுத்திடும்பத்தியம்பசுமோரன்னம்
தடுத்திடாதேரையன்வாக்குபொய்யாது
அடுத்திடும்நீரடைப்புதானேடுமே, (உஎ)

(அண்டவியாதிக்கு எண்ணெய்.)
ஓடும்அண்டவியாதிக்குஎண்ணெய்கேள்
தேடுந்தேரையன்தெளிவாயுரைக்கிறேன்
ஆடுமாதுமணக்கெண்ணெய்படியரை
தாடுமிளகுதக்காளிசேர்த்திடே. (உஅ)

சேர்த்துவெந்தயஞ்சிறந்தபலமொன்று
பார்த்துயெண்ணெயில்பதமாய்க்கலந்துமே
தூர்த்தடுப்பினில் துய்யவெடுத்திடு
ஏர்த்துமேகடுகோடேயிறக்கிடே. (உகூ)

இறக்கிகாலையிலேந்திழையேனும்
முறைப்படிப்பலமூன்றுநாள்தான்கொடு
கறைக்குமேபுளிக்காட்டாதேயுப்பையும்
சிறைக்குமெண்ணெயைத்தேரனுரைத்தேனே. (௩0)

உரைக்கும்பத்தியமூண்டிடுவாறுநாள்
சிரைக்குமேயறுசுவைபதார்த்தந்தள்ளுநு
பரைக்குமேமூநாள்பத்தியந்தான்மூறி
மூரைப்படிதேரன்முனிவற்குரைத்தேனே. (௩க)

(ஒருதலைவியாதிக் கெண்ணெய்.)

உரத்துமேத்தலைவியாதிப்பிணிநீங்க
காத்துமெள்ளவெண்ணெய்க்கணக்குடனூழிதான்
சிறைக்குமாவின்பால்சேரணைகாலதாய்
நிறக்குங்கம்பஞ்சேர்த்திநீரையுங்கூட்டிடே. (௩௨)

கூட்டுமாதொண்டைக்கோவைத்துளிர்ச்சாறும்
நீட்டுமிளகுநேர்ந்தபெருங்காயம்
போட்டுமெண்ணெயில்பொடித்துக்கலக்கியே
வாட்டடுப்பினில்வைத்துயெரித்திடே. (௩௩)

எரித்துக்காலையிலேழுநாள்ஸ்தானஞ்செய்
தெரித்துமண்டைநோய்தேர்ந்தகண்ணுக்குத்
கரித்துக்காலையில்கணக்காய்முழுகிட
குறித்துவோடும்வியாதிகைகண்டதே. (௩௪)

(ஒருதலைநோய்க்குநசியாக்கிராணம்)

கண்டபோதுகண்டத்தின்வியாதிக்கு
அண்டமேபெருங்காயஞ்சமுத்திரா
பெண்டுமேமுலைப்பாலினாலாட்டியே
உண்டும்நாசியில்வுறைபப்பிழிந்திடே. (௩௫)

(பீநசத்திற்குநசியப்போக்கு)

பிழிந்திடும்பின்னம்பெருத்தநசியங்கேள்
கழித்திடுங்காரக்கருதுமெருக்கனும்
விழித்திடுமாதளம்பூகொழுந்துடன்
அழிந்திடுந்துங்துப்பூவுந்தூக்கிடே. (௩௬)

தூக்குங்கன்னியின்றுய்யமுலைப்பாலில்
தாக்குங்கல்வத்தில்தாழவரைத்துமே
பாக்கும்நாசியில்பாங்காய்பிழிந்திட
நீக்கும்பீனசம்நீங்கியேயோடுமே. (௩௭)

(செவி நோய்க்கு எண்ணெய்.)

ஓடுங்காதிலுறைத்தபிணிகட்கு
தேடும்வெள்ளுள்ளிதீர்க்கமாமஞ்சள்
காடுஞ்சுக்கொடுக்கடியவலம்புரி
நீடுஞ்சீரகம்கத்தையிறைச்சியே (௩௮)

போக்கில்லாமல்பொருந்தமுகெப்பில்
வாக்குதப்பாமல்வகைபாண்டமூட்டிடே. (எகக)

மூட்டித்தீயில் மூறிராமல்காய்த்திடு
ஆட்டிமண்டலமன்பாகவுண்டிடில்
நீட்டுரோகம்நெருக்குங்கபரோகம்
பூட்டுபோல்வழிபோலப்பறக்குமே. (எகஉ)

பறக்குமென்பதுபாடியதுண்மையே
பறக்குமென்பதுபாடியதென்குரு
பறக்குமென்பதுபாடியசெந்திரு
பறக்குமென்பதுபாடியதேறனே. (எகங)

தேறன்வாக்குத்திசையெட்டும்பொய்யாது
தேறன்வாக்குசிறந்தசித்தர்கட்கு
தேறன்வாக்குபொய்யாதுமெய்யாகுங்காண்
தேறன்வாக்கிதுதெளிந்துவரைத்ததே. (எகச)

## குதகவாயுவுக்கு மகாலிங்காதி மெழுகு.

அறையுங்குதகமறிவைவெளிப்பட
திறையுங்கூமுட்டிச்சாறுமிருநாழி
நிறையும்வெள்ளுள்ளிநேரும்நொச்சிலிச்சாறு
பறையும்முப்புப்பகர்ந்திடகாலலே. (எகரு)

எடுத்துலிங்கமெழிலாணவோமமும்
தொடுத்துகாயந்தொடரும்வெண்காரமும்
கடுத்தமிளகுகருதுமேர்வாளமும்
தொடுத்தவெட்டெண்கோண்றக்கிளறிடே. (எகசு)

இன்றிதாதுளங்காய்போலுருட்டியே
நன்றிமண்டலகவிலவருந்திடில்
கன்றிதுன்மமூங்கருதியகுதகம்
உன்றிகாணகமுழன்றோடிப்போகுமே. (எகஎ)

போகும்பத்தியம்பொன்னுங்கணிக்கிலை
ஆகுமகத்தியரியமுருங்கையாம்
பாகுக்கத்திரிபகருமிறைச்சியாம்
ஆகுமென்றேயலைறந்தனர்தேறனே. (எகஅ)

இளைக்கிமுட்டையிலைசந்தமுசுரண்டம்
களைக்கிமேகருங்கோழியினண்டமும்
நுளைக்கிடும்ரண்டிளைக்கிசமனதாய்
முறைக்கிடுங்கள்ளிமுருக்கசாற்சேர்த்திடே. (௯௯)

சேர்த்துமேசாறுசிறக்கவொருநாழி
பார்த்துமேபசும்பால்படிகாலதாய்
நார்த்தும்வேப்பெண்ணெய்நாழிசமனதாய்
கோர்த்துக்கலந்துகொதிக்கஎரித்திடே. (௱)

எரித்திடுமெண்ணெயிலைசந்தசெவியினில்
வரித்திடும்பிணிவாகாய்சொரிந்திட்டு
நிரித்திடும்பஞ்சில்நோய்ப்பொதிந்திட
குரித்தநோயுங்குடியோடிப்போகுமே. (௱௧)

(கண்படலத்திற்கு நேத்திராஞ்சனக்குளிகை.)

போகும்படலம் பூணியேபோவதற்கு
காருமிளகுகடியமேதார்த்திப்பிலி
ஏகுஞ்சுக்குவிசைந்தமால்தாரமும்
ஆநுஞ்சங்குவதிமதுரங்கூட்டிடே. (௱௨)

கூட்டுதத்துங்கொடியபுங்கன்விரை
காட்டுச்சீரகங்கடுகுரோகணியும்
நீட்டும்பன்றிவின்தேர்ந்தகொம்புப்பொடி
மாட்டுச்சிலேயுமாமைமயெடுத்திடே. (௱௩)

எடுத்திடும்புளிகருகமுடன்
நடுத்திடும்வெள்ளிநற்சாவல்கண்மலம்
சடுத்திடுமிந்துப்புச்சரியேசயங்
உடுத்திடுங்கல்லத்திலுறவாடுமே (௱௪)

ஆடுமேகந்திப்பத்திரியாவட்டம்
சூடும்பூச்சாறுசுண்டவரைத்துமே
கூடுமேமணிக்கயிர்போலுருட்டியே
நீடுமாத்திரைநிழலிலுலர்த்திடே. (௱௫)

உரைத்துதேனிலுரைத்திடப்படலம்போம்
கரைத்துமேகன்னிப்பாலிலுரைத்திடு

விளைத்தநேத்திரம்விழியினிற்பூசிட
திரைதப்படலந்தோர்ந்துதாஞேடுமே (௱௬)

(மாலைக் கண்ணுக்குமை.)

ஓடிமாலையின்கண்ணுக்குகந்தமை
நீடும்நீர்ச்சுழல்நேர்ந்தசாம்பலுடன்
கூடுங்கல்வத்தில்கூட்டிறவாகவே
தேடுமெள்ளெண்ணெய்தோர்ந்தபூண்டுச்சாறே. (௱௭)

சாறும்பத்திரிச்சார்ந்தவெள்ளுள்ளியும்
நீறுமிளகுநேர்ந்தமைபோலாக
ஆறுவேளையந்திசந்திபோட்டிடு
கூறுமேவிளக்கெண்ணெயில்மூழ்கிடே. (௱௮)

மூழ்கிடமாலைக்கண்ணுமறிந்திடும்
கழுகிடப்பார்வைநட்சத்திரங்காணும்
கழுகிடப்பார்வைகண்டுருகப்பாயும்
பழுதிடதேறன்பாடிதுண்மையே. (௱௯)

(நேத்திரநீர்வடிதலுக்குமை)

உண்மையாகவுரைக்கிறேன்மையொன்று
வண்மையானவராப்பூலாபச்சிலை
கண்மையானக்கடுக்காய்மாசிக்காயும்
தண்மையானதோர்தான்றியுஞ்சேர்த்திடே. (௱௰)

சேர்த்திடுகாசுசிறந்ததோர்கட்டியும்
பார்த்திடும்படிப்பாங்காய்விராகனுற்
தூர்த்திடும்படித்துய்யவவித்துமே
ஆர்த்திடும்படிஅறையப்பிழிந்திடே. (௱௧)

பிழிந்துமேகறண்டியில்புனிதமாய்
செழிந்துசீனமாம்சேர்ந்தபொரிபதும்
குழிந்தும்காரங்குறிக்கும்விராகன்கால்
சுழிந்துமைபோல்சுறுக்காய்அரைத்திடே. (௱௨)

எடுத்துமையையிருகண்பொருந்தவே
அடுத்துவைத்துநாளன்பாகப்பூசிடு

தொடுக்கும்புளியன்சேர்ந்தநொயத்தில்
கடுக்குங்கண்ணைகழுவிப்பார்த்திடே. (௫௩)

பார்க்கும்போதுபரவுங்கண்ணீரொங்கே
ஆர்க்கும்போதுஅடர்ந்தசிவப்பேகும்
பூர்க்கும்பூளைபொருந்தவேயோடிடும்
தீர்க்குந்தேரையன்றெளிந்தமுறையிதே. (௫௪)

(நேத்திராஞ்சனம்.)

தொண்ணூற்றுருக்கும்மருந்து.

தேரன்வாக்குதிசையிலும்பொய்யாது
வேறமருந்துவெளியாயுரைக்கிறேன்
கூறுந்துளசிகொடியபுண்ணாக்கிலை
வீறுமேபுளியிலையையெடுத்திடே. (௫௫)

எடுத்திடுங்கோளமிசைத்தகட்டியுடன்
கடுத்திடுந்தூளுகடிகைவிரண்டதாய்
படுத்திடும்பழம்புளியையிசைந்துமே
தொடுத்திடுஞ்சீலைதுணியுடன்கட்டிடே. (௫௬)

கட்டிமேகண்ணிப்பாவினிலூறவை
எட்டொன்றாகியெழிலாகக்காய்ந்தபின்
மூட்டுங்கண்ணில்முயன்றவலிக்கிதை
செட்டும்பட்சஞ்சிறக்கப்பிழிந்திடே. (௫௭)

சிறக்கும்வாரஞ்சிறந்ததலைநீர்வார்
முறைக்குந்தொண்ணூற்றுமுயன்றவலிநோயும்
இறக்குங்காலயிசைந்ததுலைகள்போம்
பறக்குந்தேரன்பகர்வாக்குபொய்யாதே. (௫௮)

(தந்தவியாதிக்குபஞ்சபூஷிதப்பொடி.)

பொய்யாதப்யாபுகலுங்குருமொழி
ஐய்யாயாந்தர்க்கமையன்பொடியொன்று
செய்யாராவடம்சிறந்தபீங்காந்தனில்
கைய்யதான்திகடுக்காயுந்தாக்கிடே. (௫௯)

தூக்குமாசக்கடுக்காய்துடிபலம்
நீக்கும்காரசிழம்காசக்கட்டி

பாக்கும்பீங்கான்பழாசந்தான்பிழி
காக்குங்கல்வங்கடியவேபோட்டிடே. (௬0)

போட்டுமேயரைபொருந்தபூஷிதத்தை
ஆட்டுமேஜாமம்அறுபதுசென்றபின்
கூட்டுமேயெடுகுறித்துக்கணேசனை
கூட்டுமேகல்வம்கிழலிலுலர்த்திடே. (௬௧)

உலர்த்திடும்பொடியுற்றபல்ரோகத்தை
கலர்த்திடும்பொடிகாலையில்தேய்த்திட
பெலர்த்திடுந்தந்தம்பெரியபல்நோய்களும்
அலர்த்திடாமலலைந்துதானோடுமே. (௬௨)

பல்புழுவுக்கு.

ஓடும்பல்லிலுறைந்தபுழுநீங்க
சாடும்பல்லுக்குக்கன்னியினால்வாங்கி
நீடுங்கீழ்க்காயினேர்ந்தநெல்லிவிரை
ஆடுங்காப்புக்கதிகந்தான்கட்டிடே. (௬௩)

கட்டியேபின்னுங்கனமசியென்றோது
திட்டமாயுருதேர்ந்தமோராயிரம்
சட்டமாய்ச்சொல்லிச்சாற்றிடுவவன்பேரை
விட்டுவோடும்விரைந்தபுழுக்களே. (௬௪)

(வாய்ப்புண்ணுக்கு ரத்தசஞ்சீவி யெண்ணெய்)

விரைந்தவாயினில்வெல்லும்பிணிநோரில்
கரைந்தமாமணக்கெண்ணெய்யருபலம்
அரைந்தசங்குசாறதற்குச்சரியிடை
பரைந்தவெள்ளுள்ளிபத்துப்பலமபோடே, (௬௫)

எடுத்துமஞ்சளெழிலானகஸ்தூரி
கடுத்துகற்சிரகங்கரியசீரகமும்
தொடுத்துமூன்றுந்துவளப்பொடித்துமே
அடுத்துவெண்ணெயிலன்பாகக்காய்ச்சிடே. (௬௬)

காச்சுமபோதுகடியகடுகுறும்
நீச்சுமேனிநெடியபுண்ணிற்பூச
ஆச்சுமூன்றுநாளாறவேளைதான்கொள்ள
போச்சுவாய்ப்புண்ணுபொருந்தவேயுண்டிடே. (௬௭)

உண்டிடும்போதுவோடும்பிணிசேரு
அண்டிடுமையாப்புபிணிநீக்கும்
கண்டிடுமேகங்குருதியவெள்ளையும்
துண்டிடுஞ்சூலைசிறங்குவகைநீங்கு (௬௮)

நீங்கும்பத்தியநேர்ந்தபத்துநாளாம்
பாங்கும்வெந்நீரும்பச்சரிசியுண்ணு
ஏங்குமேழுநாளெண்ணெய்க்கடுகுசேர்
தேங்கும்வாய்ப்புண்ணுந்தேறன்சொல்லுண்மையே. (௬௯)

உண்மையாகவுரைக்கிறேன்சூரணம்
தண்மையானதாரம்பரங்கிச்சக்கை
வெண்மையானவெடியுப்புக்கல்லுப்பு
நுண்மையாகநறுக்கிப்பலமிடே. (௭௰)

எடுத்திடுமாவினெண்ணெயாமணக்கு
கடுத்திடுமுறைக்கற்றாழைச்சாற்படி
முடித்திடும்படிமூன்றுசாமமெரி
அடித்துமூன்றுநாளாற்வேளையுண்டிடே. (௭௧)

உண்டிடும்போதுறையுங்கொறுக்குபுண்
அண்டிடுமையாப்புதடிப்புகள்
கண்டிடுஞ்சூலைகிரந்திபறங்கியும்
ஒண்டிடாமலுலகில்விட்டோடுமே. (௭௨)

(சகலரணங்களுக்கும் சம்பூரணக்களிம்பு.)

ஒருங்களிம்புவுரைப்பே ஞைஞ்சித்தர்க்கு
தேடுமிருதாறுதேர்ந்தகற்பூரமும
கூடும்வெள்ளைகுலவுகுங்கிலியம்
தாடலிங்கந்தயவாகச்சேர்த்திடே. (௭௩)

சேர்த்திடப்பாசிறந்தமாசிக்காயும்
தார்த்துமேகடுதான்றிகாசிக்கட்டி
பார்த்துவோரெடைபாங்காக்கல்வத்தில்
கோர்த்துமேவெண்ணெய்குலாவியரைத்திடே. (௭௪)

அரைத்திடப்பாவறுபதுசாமந்தான்
நிரைத்துதண்ணீரில்நோய்மிதக்கவே

கரைத்துத்தண்ணீரில்கடுகள்காறை
சிதைத்தசிமிழில்சிறப்பாயெடுத்திடே. (௭௫)

எடுத்திடுமெழிலானகளிம்பதை
கடுத்திடுஞ்சூலைகடியாணங்கட்கு
அடுத்திடும்படியானதோர்மூன்றுநாள்
தொடுத்திடும்படித்தேறனுரைத்தனே. (௭௬)

தேரன்குருமொழிதிசையிலும்பொய்யாது
வேறவாகடம்வேண்டுமோசித்தர்க்கு
கூறாவுகிடையாதின்னூலுக்கு
திறவேயங்கித்திரியாதேசித்தரே. (௭௭)

சித்தர்கோர்வைகள்செப்பினானந்தம்
முத்தரானவர்முயன்றதனன்மாம்
ஓத்தசாஸ்திரம்ஓங்கும்பெருநூல்கள்
பத்தர்மாமுனிபகர்ந்ததிதுவாமே. (௭௮)

நீராகவிக்கலுக்கு.

பகரும்விக்கல்பறக்கும்வழிகேளு
நிகருஞ்சந்தனம்நேருஞ்சாம்பிராணியும்
தகருமதூரந்தாக்குமகிலுடன்
முகருந்தூளாய்முடிந்தெடுத்திடே. (௭௯)

எடுத்திமபுகையேகவிக்கலுக்கு
பிடித்திடும்படிமூன்றிருபோழ்தினில்
கெடுத்திடும்விக்கல்கெதிகெட்டோடிடும்
வடுத்திடுந்தேறன்வாக்குப்பொய்யாதிதே. (௮௦)

ஜன்னிமயக்கபித்தகியாழம்.

பொய்யாதையாபுகலுங்குருமொழி
அய்யாபித்தம்அகலும்படியாக
மெய்யாய்கோஷ்டம்விரும்பும்பற்பாடகம்
துய்யாசிரகந்துடிசேர்பலமெடே. (௮௧)

எடுத்திடுபச்சைஎழிலானநெற்பொரி
தொடுத்திடும்வில்வம்தொடர்ந்தநிலவேம்பு
கடுத்திடுஞ்சுக்குகடியகிலவிளா
அடுத்திடமோறுதண்ணீர்படிசேரே. (௮௨)

சேர்த்திடும்நாழிசிறந்தப்படிபால்சேர்
பார்த்திடுஞ்சீனிபகரும்மறுபலம்
கோர்த்திடும்பாண்டங்குலாவிகலக்கியே
யேர்த்திடுதீயில்லெழிலாயிறக்கிடே. (௮௩)

இறக்கும்போதெழிலானகணேசனை
உறக்கப்போற்றிபணிதாள்பணி
முறக்கமண்டலப்பயன்றகியாழடன்
பறக்குஞ்ஜன்னியயந்தோடிப்போகுமே. (௮௪)

பித்தகாசத்துக்கு குக்கிலாதி.

போகுங்காசப்புகலுங்குக்கிலாதி
யேகுமாமணக்கெண்ணையறுபலம்
ஆகும்பொன்னுங்கண்ணிச்சாறிருநாழி
பாகுங்கையாந்தகரைச்சாறுகூட்டிடே. (௮௫)

கூட்டும்மாசிக்குலாவுகடுக்காயும்
நாட்டுசீரகம்கவிழுங்கருஞ்சீரகம்
ஈட்டுதான்றிகழும்லவங்கமும்
கூட்டும்பத்திரிகூழும்வசம்பெடே. (௮௬)

எடுத்திடும்பட்டைஎழிலாமகாப்பூ
கடுத்திடுஞ்சக்கைகாசிக்கட்டியுடன்
அடுத்திடும்வால்மிளகுகசகசா
தொடுத்திடும்ஜாதிக்காயுடன்தூக்கிடே. (௮௭)

தூக்கியொன்றுதுவளவிடித்துமே
தாக்கிபாண்டந்தனியவைத்திடு
நோக்குங்காளிருபோதொருமண்டலம்
தேக்கும்பித்தகாசந்தெளிந்தோடுமே. (௮௮)

ஓடும்பத்தியமுறையும்பொன்னுங்கண்ணி
சாடுந்துவரைசாற்றுமுருங்கிலை
நீடும்பிஞ்சிசிகிலும்புளியாரை
கூடும்பத்தியங்குறையாமலுண்டிடே. (௮௯)

(காலவலி ஜன்னிக்கு ரத்தினகோடரித் தயிலம்)

உண்டிடுங்காலவலிபோவதற்
கண்டிடுங்கண்டங்கத்திரிவேர்சமன்

அண்டிடுமெண்ணெய்யாவின்படிபால்சேர்
தூண்டிடு மூசுக்கைச்சாற்படியெடே. (கய)

எடுத்திடும்நொச்சிமெழிலாமாவிலிங்கை
அடுத்திடுமாவின் பட்டைபிடித்துமே
தொடுத்திடுமெண்ணெய்தோன்றநலக்கிடு
விடுத்திடுங்காயம்விராகன்சரிசேரே. (கக)

சேர்த்திடுங்குப்பைசிறந்தவசம்புள்ளி
கார்த்திடுமோமம்கடியசக்ராஷ்டம்
தூர்த்திடுகோஷ்டந்துடியாய்ப்பலமெடு
சார்த்திடுமெண்ணெய்முறைப்படிக்காய்ச்சிடே. (கஉ)

காய்ச்சுமெண்ணெய்கருதியமண்டலம்
மூச்சடாமல்முழுகுமுறைவிடா
தோச்சுமேகபாலவலிசன்னியும்
போச்சுதென்றுபுகன்றனர்தேறனே. (கங)

சன்னி - ௰௩ - க்கும் - எண்ணெய்.

தேறன்சொல்மொழிதிசையிலுமிபொய்யாது
வேறெண்ணெய்விளம்புவேன்சன்னிக்கு
கூறவேமயினைக்குறித்திடும்பாண்டத்தில்
ஊறமயிற்பிடித்துடியாய்நறுக்கிடே. (கச)

நறுக்கியெண்ணெய்நழுவாமல்க்கலந்தேபோடு
குறுக்குஞ்சுக்குடன்குறித்திடுஞ்சாம்பிராணி
முறுக்குங்காலமுதிர்ந்ததிப்பிலியும்
வறுக்குவோமம்வகையாக்கிராம்பெடே. (கரு)

எடுத்திடுமெழிலானமாத்தையும்
தொடுத்திடுங்குப்பைதொடர்ந்தமிளகுடன்
சடுத்திடும்சகற்பூரஞ்சமனெடை
பொடுத்திடுந்தேசாவரம்பொடித்திடே. (கசா)

பொடித்துமெண்ணெய்பொருந்தபுகட்டியே
நடித்துமேபதம்நன்றாயிறக்கியே
படித்துப்பூசைபகர்ந்துகணேசருக்கு
முடித்துமண்டலமுறைப்படியுரைத்தேனே. (கஎ)

கசகசாலேகியம்

உரைக்கும்லேகியமின்னமிதுமுறை
கரைக்கும்வாலுமிளகுகசகசா
நிரைக்குநன்றாரிசேர்ந்தகண்ணிமிட்டான்
புரைக்கச்சூரணமுற்றும்பொடிசெய்யே. (௯௮)

செய்துசர்க்கரைதெளித்திடும்பாகினில்
எய்துஞ்சூரணமெழிலாகத்தூவியே
பெய்துநெய்யைப்பிசகாமற்கிண்டிடு
கொய்துபாகங்குறுகவெறக்கிடே. (௯௯)

எறக்கிமெல்லவெழிலாய்க்கலேசனை
சிறக்கப்போற்றிசிறப்பாயிருவேளை
உறக்கமண்டலமுற்றுமருந்திட
பிறக்கும்வியாதிபோகும்வகைசொல்வேன். (௱)

சொல்லுமீளைசயகாசரோகம்போய்
வெல்லுந்தாதுவிளைந்தருதிகள்போம்
அல்லுந்தாதுவதிவிர்த்தியுமாய்க்
கல்லுபோலமேனிக்குமிகவிறுகுமே. (௱க)

(சோகை காமாலை விக்கத்திற்கு - கியாழம்.)

இறுகுஞ்சோகையிசைந்தகாமாலைக்கு
குறுகும்நெல்விகுமிழ்த்திடுமள்ளியும்
உறுகும்விழிவோனவாசனும்
கிறுகுங்கையான்சேர்த்தகொட்டிவேரே. (௱உ)

வேறுடன்சிறுபூளைவேறிதொருடு
தூறுடன்சம்புடையதுளிருடன்
காறுடன்சிறுகீரைநெரிஞ்சின்வேர்
ஊறுடன்வாகையூஞ்சல்பட்டைதூக்கே. (௱ங)

தூக்குஞ்சாக்குத்துய்யவொருபலம்
தாக்குங்கடுக்காய்தான்றிநேராக்கனியும்
சிக்குஞ்சீரஞ்சிறந்தகாட்டுச்சீரகம்
பாக்குந்திப்பிலிபகரும்விதாருமே. (௱ச)

ஆறுடனிவையரியவிடித்துமே
கூறுபாண்டங்குலாவிகலமிட்டு
நீறுமெட்டொன்றாப்போராய்க்குறுக்கியே
பாறுமேபதம்பாங்காகக்காய்ச்சிடே. (௱௫)

காய்ச்சியாறுநாள் கடுகவருந்திடு
போச்சுபத்தியம்பொருந்துமுப்பாகாது
நீச்சுசோகைநிகலும்நீர்க்கோர்வையும்
மூச்சிடாமல்முடுகியேயோடுமே. (௱௬)

பித்தவெடிப்புக்கு.

ஓடும்பித்தவெடிப்புவந்தோர்கட்கு
கா மெருகுநவிலுந்துளிர்தனை
நீமோவின்றஞ்சேர்ந்தபாலினிலுண்
ஓடும்பித்தமுபன்றேடிப்போகுமே. (௱௭)

நீரிலுதிரங் கண்டால்.

போகும்நீரில்பொங்குமுதிரங்கண்டால்
ஏகும்பச்சையெழிலாமரிசியை
வாகும்வீராலிவன்மூலிதன்னிலே
பாகுமூன்றுநாள்பாங்காகவுண்டிடே. (௱௮)

உண்டபோதுவுறையுமிரத்தமும்
அண்டிடாமலவனிவிட்டோடிடும்
தொண்டரானதொகுப்புள்ளமாந்தற்கு
கண்டுதேறையன் கடியவுரைத்ததே. (௱௯)

முழங்கால் வாதப்பிடிப்புக்கு.

உரைக்கும்வாதமுழங்கால்வியாதிக்கு
இரைக்கும்வீழிபின்சேர்ந்தபுண்ணாக்கிலே
கரைக்குமாவாரைகடியவெள்ளருளியும்
விரைக்குமாமணக்கெண்ணெய்யில்கூட்டிடே. (௱௰)

கூட்டுத்தீயில்கொதிக்கவறக்கியே
திட்டுவாதத்திமிர்முழங்கால்கட்கு
விட்டிடாமலேவேதிட்டுக்கட்டிட
மீட்டுமேமுழங்கால்வாதமோடுமே. (௱௰௧)

இராதாரணங்கட்குப் புகை.

ஓடும்ரணங்களுற்றபிணிகட்கு
நீடுங்கொழுஞ்சிநேர்ந்தபட்டாவாரை
பாடுமோரிலேப்பாகுடனுறவை
சூடுபலிங்கமுஞ்சுங்கானில்பூட்டிடே. (௱௰௨)

பூட்டுஞ்சுங்கான்புகைதூளிதம்பெற
நீட்டும்வாசியையிழுத்திட்டடக்கியே
மூட்டுஞ்சுவாசமுடிக்கிப்பிடித்திட
நீட்டுமேகரணந்தெறித்தேங்குமே. (௱௰௩)

தேங்கும்பத்தியந்தெளிந்தபாலுண்டிடு
ஆங்குமாறுநாளன்னம்பருப்போடுண்
நீங்குஞ்சூலைநெருங்குமரையாப்பு
வாங்குந்தங்கண்ணுவலிபறந்தோடுமே. (௱௰௪)

ஓடும்லிங்கமுறுதிபிளவையாம்
நீடுமேகண்டம்நேருப்பிற்புருதி
கூடுங்கண்ணோசைகுறிக்குங்காப் னும்
வாடும்பீனிசம்வளாந்தோடிப்போகுமே. (௱௰௫)

வாயுவுக்குக் கியாழம்.

போரும்வாய்வுக்குபுகலுங்கியாழங்கேள்
ஆகும்சுக்கு அடார்ந்தகொடிவேலி
நீகும்பரங்கிசேர்ந்தபட்டையுடன்
போகும்பிரம்பின்பொருந்துங்கிழங்கெடே. (௱௰௬)

எடுத்துமேசமனெழிலாயிடித்துமே
தொடுத்துமேசலந்தொடர்ந்தபடிநாலு
கடுத்துதீயில்கடுகௌறக்கியே
அடுத்துவாறுநாளன்பாகவுண்டிடே. (௱௰௭)

உண்டபோதுமுறுதியாமேகம்போம்
திண்டுமேவாதந்திராப்பிணியறும்
கண்டுபத்தியங்கத்திரிக்காயுண்ணு
பண்டுவாயுபறந்தோடிப்போகுமே. (௱௰௮)

## சகல கிரந்திக்கு சிகிட்சாசார எண்ணெய்.

ஏகுங்கிரந்திஎழிலாம்பாங்கிக்கு
பாகும்பூசினிபாங்காம்படிச்சாறு
ஆகும்கற்றாழைபானகுப்பூழிமேவர்
நீகும்கையான்சாற்றோரகத்தூக்கிடே. (௱௰௯)

தூக்கும்வல்லாரைதுடியானவில்வமும்
தாக்கும்வீழியின்தாங்குமாதொண்டையும்
காக்குங்கொடிப்பாலைகடியநீர்ப்பூலாவும்
பாக்கும்பாச்சானைபாங்காய்நிறுத்திடே. (௱௨௰)

நிறுத்தியேதென்னைநேர்ந்தபொரிபானை
கறுத்திடும்யானைகடியநெருஞ்சியும்
தறுத்திடுந்தக்காளியிலைச்சாற்நாழி
மறுத்திடுமறுகன்வேருமாட்டிடே. (௱௨௧)

மாட்டிச்சாறுமதிப்பாய்ப்பிழிந்துமே
கூட்டும்பாண்டங்குலாவிகலக்கியே
நீட்டித்தியினில்சோரவெறித்துமே
சூட்டிக்கியாழம்சுருக்காயெறக்கிடே. (௱௨௨)

எறக்கியாமணக்கெண்ணெயிருநாழி
உறக்கிக்காடியுகந்தபசுபாலும
சிறக்கச்சாறுசிறந்தயிளநீரும்
சுறக்கவேருங்கணக்காயெடுத்திடே. (௱௨௩)

எடுத்திடப்பாயெழிலாமிலப்பனை
அடுத்திடுமசுவகெந்திபாற்பலம்
கடுத்திடுங்கருவானசீர்பலம
முடுத்திடுதிலக்குமிழிமேவர்சேர்த்திடே. (௱௨௪)

சேர்த்துதுத்தியின்சிறந்தசித்திரமூலம்
பார்த்துப்பூமிபகருஞ்சர்க்கரையும
நீர்த்துசாதிநெருங்குபத்திரியும்
கோர்த்துமதூராங்குமிப்பாய்நிறுத்திடே. (௱௨௫)

நிறுத்துமாஞ்சில்கொடியலவங்கமும்
பொறித்துமேலம்பொருந்தியசோம்புடன்

திறத்துந்திரிபலைதிரிகடுவெந்தியம்
கறித்துசேர்முங்கள்துரிசூட்டிடே. (௱௨௬)

கூட்டும்வாறுகுலவுங்கசகசா
நீட்டுமிளகுசேர்ந்தகடுக்காயும்
ஓட்டுகாளிசஞ்சேர்ந்தகார்போகமும்
காட்டுச்சீரகங்கடுசினிதூக்கிடே. (௱௨௭)

தூக்குமேமுத்தக்காசுதுடிடலம்
தாக்குங்கோரைத்தனிலவங்கப்பட்டை
பாக்குமேபசும்பாலிருநாழியாய்
போக்கிலாமற்பொதிந்தடுப்பேற்றிடே. (௱௨௮)

ஏற்றிமெழுகுபெண்ணெய்பதத்தினில்
காற்றிலாமல்கடுந்தியில்தானெறி
போற்றிவீசனைபொருந்தவேதாள்யணி
ஆற்றிகாண்டியன்பாகக்கொண்டிடே. (௱௨௯)

கொண்டபோதுமேகூறியபத்தியம்
கண்டபதார்த்தங்காரிழையாகுங்காண்
அண்டகுலைகளையுந்தடிபுண்கள்
துண்டமேசுந்துடித்தோடிப்போகுமே. (௱௩௰)

போகுங்கிரந்திபொருந்தும்புள்ளிமேகம்
ஏகுஞ்சிறங்குபெழிலாந்தடிப்புகள்
நீங்கும்வாய்ப்புண்கெருங்கியரோகமும்
போகும்புண்புரைபொருந்தாமலோடுமே. (௱௩௧)

ஓடுமேகப்புருதிபிணிநீங்க
காடுபோமணைத்திகளைநீணயிருநாழி
நீடுமிளநீர்சேர்ந்தபசும்பாலும்
கூடும்பொன்னுங்குமரிச்சாற்சேர்த்திடே. (௱௩௨)

சேர்த்துவாதொண்டைசிறந்தவில்வயிலை
கார்த்துவதுகன்கள்ளியுடப்பட்டை
நீர்த்துப்பூண்டுடன்செருக்கும்பெருங்காயம்
பார்த்துசமனெடைப்பாங்காகத்தூக்கிடே. (௱௩௩)

தூக்குஞ்சிரகத்துடியானவெந்தயம்
தாக்குங்கிராம்புதனியானயேலமும்
காக்குஞ்சாதிக்காய்தடியகொத்தமல்லி
பூர்க்கும்நாகப்பூபொருந்துஞ்சீனமெடே. (௱௩௪)

எடுத்துக்கல்வமெழிலாய்ப்பொடித்துமே
அடுத்துச்சீனியதுபலஞ்சேர்த்துமே
தொடுத்துப்பாகமாய்துவளவிரக்கியே
மூடுத்துக்கணேசனைமுன்னின்றுபோற்றிடே. (௱௩௫)

போற்றுமண்டலம்பொருந்துமெண்ணெய்யுண்ணு
தோற்றுமேகந்தொடாதொருநாளும்
காற்றுமேனிதான்கல்போலிறுகிடும்
தூற்றும்வாய்ப்புண்ணுதாறியேயோடுமே. (௱௩௬)

எலி விஷத்துக்கு சிகிட்சை.

ஓடுமேபதினெட்டெலிகடி
காடுமேகரும்பூனைமலத்தைதான்
நீடுங்கழஞ்சிசேர்ந்தளவதாய்
கூடுங்கருப்பன்கட்டியிலுண்டிடே. (௱௩௭)

உண்டபோதுமுறுதியாம்பத்தியம்
கண்டவாறுநாள்கடியவுப்புமாகா
கொண்டவேழாநாள்கூறுந்தலைமூழ்கி
விண்டபத்தியம்விட்டுவருந்திடே. (௱௩௮)

நாய். நரி. கடிக்கு மருந்து.

அருந்தும்பேர்து அலறிவிஷமோடும்
திருந்தும்நாய்நரிதீராவிஷங்கட்கு
பொருந்துமருந்துபூட்டுறேன்மாந்தற்கு
குருந்துந்தக்காளிகூறுமருந்திடே. (௱௩௯)

எடுத்துமூன்றுநாளெழிலாயருந்திட
கடுத்துமேவருங்கடியவிஷங்களும்
அடுத்துமேவுடலவனிவிட்டோடிடும்
தொடுத்துபத்தியந்தோன்றுமுப்பாகாதே. (௱௪௰)

ஆகாதாறுநாளன்புடன்பத்தியம்
சாகாத்தயிலஞ்சடுதியில்தான்முழு
போகாவிஷமும்பொருந்தாமலோடிடும்
வாகாத்தேரையன்வலுவாயுரைத்ததே. (௱௪௧)

பூனைகடிக்கு சஞ்சீவி மூலிகை.

உரைத்துமேபூனையுற்றவிஷைப்நீங்க
கரைத்துஎட்டியின்காயின்பழத்தையும்
பரைத்துமேபசும்பாலிலரைத்துமே
திரைத்துமூன்றுநாள்திரமாய்க்குடித்திடே. (௱௪௨)

வண்டுகடிக்கு மருந்து.

குடித்தபோதுமேகூறும்விஷமறும்
கடித்தவண்டுகடிக்குமருந்துகேள்
நடித்தவெள்ளாட்டுநாழிபால்தானெடு
வடித்தமோரினில்வாகாய்கொடுத்திடே. (௱௪௩)

கொடுத்தபோதுமேகூறுமவிஷமறும்
கடித்தவண்டுகடிவிஷத்தானறும்
தொடுத்தசில்விஷம்தோன்றுதொருநாளும்
வடுத்ததேரையன்வாக்குபொய்யாதிதே. (௱௪௪)

இதுவுமது.

பொய்யாதையாபுங்கலுகுருமொழி
அய்யாமருந்தறைவேறொருமுறை
மெய்யாய்ரசங்கத்தின்மேவும்பதங்கத்தை
துய்யாமூன்றுநாள்துடியாய்வருந்திட. (௱௪௫)

பூரான் செய்யான் கடிக்கு.

அருந்துபத்தியமாகாபுளிபுகை
பொருந்துமேபூரான்புகலுஞ்செய்பானுக்கு
குருந்துமெருக்கன்கொடியவசம்புடன்
வருந்துநாய்மலம்வாகாகப்பூட்டிடே. (௱௪௬)

பூட்டியொன்றாய்ப்புகலுங்கலுவத்தில்
மாட்டிரோகித்துமாத்திரைசெய்திடு
திட்டியாறுநாள்திரமாயுண்டிடு
வாட்டிபூரான்வலிவிஷம்நீங்குமே. (௱௪௭)

பெருச்சாளி கடிக்கு.

நீங்குமேபெருச்சாளிவிஷங்கட்கு
தாங்குங்கொல்லன்றனிப்பட்டைத்தாளிடி
பாங்கும்வெண்ணெயில்பாக்களவுண்டிட
வாங்குமேவிஷம்வலிபறந்தோடுமே. (௱௪௮)

பெருச்சாளிகடிக்கு ஆக்கிராணப்புகை.

ஓடும்நாசியிலுற்றவாக்கிராணஞ்செய்
தேடுமயிற்பீலிதெளியப்புகைபிடி
காடுறைபுங்கடிவிஷந்தன்வலி
வீடுவிட்டுவெளிப்புறமேகுமே. (௱௪௯)

தேள் விஷந்தீர சஞ்சீவி மூலிகை.

ஏறுந்தேள்விஷமெழிலுடன்றீர்வதற்
காகும்பெரியகருதுநங்கைவேரை
பாகும்நீரினில்பாங்காயரைத்துமே
ஆகுமட்டிப்பாலன்பாய்ப்புகைகொடே. (௱௫௰)

கொடுத்திடவிஷங்குடியேகிப்போய்விடும்
தடுத்துநசியந்தாக்குகலிகக்கும்
அடுத்துமூன்றுநாளன்பாகத்தான்காடு
கடுத்தவிஷங்கள்கழன்றேறிப்போகுமே. (௱௫௧)

போகும்பத்தியம்பொன்றுங்கண்ணிக்கீரை
ஆகுமுருங்கையானபருப்புநெய்
ஊகும்வெள்ளாட்டிறச்சியுப்புக்கண்டம்
பாகுமவெல்லமும்பாங்காகத்தள்ளிடே. (௱௫௨)

சிறுபாம்புகடிக்கு-மருந்து

தள்ளுமேசிறுபாம்புகடிகட்கு
விள்ளுங்குறிஞ்சவேரின்சமூலமாம்
கொள்ளும்வெண்ணீர்குலாவியரைத்துமே
அள்ளுமூன்றுநாளந்திசந்தியுண்ணே. (௱௫௩)

உண்ணும்போதிடுமூறாடிபாம்பு
வெண்ணுமேயுடலவிட்டுமேநீங்கிடும்
உண்ணும்பத்தியமுற்றபுளியாகா
எண்ணுந்தேரையனெழிலாயுரைத்ததே. (௱௫௪)

குஷ்டம் விழுக்கும்-மருந்து,

உரைத்தகுஷ்டமுடலைவிட்டேகுதற்
கரைத்தமருந்துகருதியுரைப்பேன்யான்
அரைத்தவலரித்தயிலமிறுக்கியே
பரைத்தப்பாணியில்பாங்காயருந்திட. (௬௫)

அருந்திடப்பாவறுபதுநாள்முறை
பொருந்தும்பத்தியம்போற்றிப்புளியாகா
திருந்துமூழுகித்திரப்புளியுண்ணு
வருந்துங்குஷ்டம்வரைந்தோடிப்போகுமே. (௬௬)

மருந்தீட்டுக்கு கிடைசை.

போகுமாந்தர்பொருந்துமருந்திடு
ஆகுந்தேங்காய்ப்பாலன்னமுடனுண்ண
வேகுமருந்துவேகமுடலைவிட்
டேகுமென்றுதெளிந்தனர்சித்தரே. (௬௭)

இதுவுமது.

சித்தர்சொல்மொழிதிசையிலுமபொய்யாது
ஒத்தமுருங்கைமேயாங்கியேசார்பு
கத்தசர்க்கரைக்கலந்துகுடிக்கில்
வைத்தமருந்துவாகாய்முறியுமே. (௬௮)

கெறு நாசன மருந்து.

முறியுங்கெற்பமுறிகெட்டுவோர்தேற்
கறியுநீலிவேர்காடியில்தான்றை
அறியுங்கெற்பமழிந்துமுடலைவிட்
டெறியும்பார்தனிலரசவிற்றுமே. (௬௯)

விழுந்தபோதுவிலாவுநாம்புநோய்
அழுந்தபூமியிலாறிவளர்த்திடும்
கொழுந்துபூநீரைக்குலாவிவெடுத்துமே
மூழுந்துநீரினில்மூன்றுநாளுண்டிடே. (௱௰)

உண்டபோதுமாறுபத்தியங்கேள்
கண்டுமேபொரிகருப்புக்கட்டியுடன்
அண்டக்காய்ந்தளவாகவேயுண்டிடில்
திண்டுகெற்பநோய்தெறிகதுவாமேறுமே. (௱௰௧)

## விதவையைக்கூட பிள்ளையில்லாதிருக்க.

ஓடுமங்கையுறுதியாய்ச்சேர்வதற்
காடுமேதலைக்கன்னிமுழுமைகயில்
கூடுமேபுணர்ந்தார்குழவனில்லை
நீடுமேவிதமினைவாயறிந்திட. (௱௪௨

## மூலரோகத்திற்குச் சூரணம்.

அறிந்துமூலமலறியேயோதற்
கறிந்துதாதுவளைகரிசமூலமும்
தெரிந்துமெருகன்சேர்ந்தகருணையும்
குறிந்துவறுகன்கூடப்பலனேடே. (௱௪௩)

எடுத்துநீர்ப்பூண்டெழிலாங்கிமங்கையும்
விடுத்துவராமிலொன்றாய்ப்பொடிசெய்து
கொடுத்துதேனிலேகுன்றியளவெண்ணை
கடுத்தமூலங்கதறியேங்குமே. (௱௪௪)

## அரையாப்பு கிரந்திக்கு எண்ணெய்.

எங்குமெண்ணெயெழிலாமரையாப்புக்
காங்குங்கோடுக்கநொச்சிவிழியும்
பாங்குகுப்பிபகருஞ்சிறுசின்னி
பூங்குவாசன்பட்டைசேத்திடே. (௱௪௫)

சேர்த்திடுமேசிறந்தகிரந்தியும்
கோர்த்துபூண்டுகுறிப்பாயெடுத்திடு
பார்த்துமாமணக்கெண்ணெய்படிநாழி
தீர்த்துஎண்ணெய்திறபாயளந்திடே. (௱௪௬)

அளந்துதீயினிலன்பாயெரித்துமே
வளர்த்துமெழுதுவகாய்ப்பதமுடன்
தளந்துவிச்சைதாளடிதான்பணி
களந்துமண்டலங்கால்மண்டலங்கொள்ளே. (௱௪௭)

கொள்ளும்போதுகொடிதானாறலேபோம்
துள்ளுமரோகந்துடிப்புடனேகுங்காண்
புள்ளுமேகண்டமாலைபிணிமேகும்
தெள்ளுமாபுனிதெளியுவாதகதே. (௱௪௮)

(ஸ்ரீ வசியம்.)

உரைத்தமங்கையருறவுபிரியாமல்
கரைத்தமருந்துகாரிமைசொல்லுவேன்
விரைத்தமேசுமழல்மேவுமனோசிலை
திரைத்தரோசனைதிரப்பலமெடே. (ாசக)

எடுத்துப்பட்டுயெழிலானபூச்சியை
அடுத்துநாகமழகாம்புனுகுடன்
தொடுத்துமேகருங்கோழியின்பிச்சுடன்
விடுத்துநீரினில்விட்டுஅரைத்திடே, (ாஎய)

(அ னு பா ன ம்.)

அரைத்துக்குன்றிபோலானமாத்திரையை
திரைத்தவெள்ளிலைதேர்ந்தசுண்ணத்திலும்
உரைத்தப்பாலும்பழம்பலவஸ்திலும்
நிரைத்தப்பாமல்நெறியுடன்தான்கொடே. (ாஎக)

கொடுத்தபோதுகுமரிப்பெண்கன்னியும்
அடுத்தமூன்றுநாளன்புடனேகுவாள்
படுத்தபடுக்கைபாவைபிரியாள்காண்
முடுத்தப்பாமல்முறைப்படிசெய்திடே. (ாஎஉ)

(யினோ சயத்திற்கு மருந்து.)

செய்யுமீளைசயகாசரோகத்திற்
குப்புமருந்துகுறிப்பாயுரைக்கிறேன்
மையும்பாங்கிப்பட்டையெடுத்துமே
துய்யப்பாலினில்துவளசுத்திசெய்ய. (ாஎங.)

செய்துபட்டைசிறப்பாயொருபலம்
கொய்துமேனிக்குறிப்பாயிருபலம்
தொய்துநாகப்பூதோன்றவரூபலம்
உய்துகோஷ்டமுமூற்றப்பலமெடே. (ாஎச)

எடுத்துமதுரமெழிலானலவங்கமும்
அடுத்துபத்திரியானகிராம்புடன்
தொடுத்துசாதிக்காதுய்பபலமெடு
தடுத்திடாமலேதான்றியுஞ்சேர்த்திடே. (ாஎரு)

சேர்த்திடப்பாசிறந்தபற்பாடகம்
கோர்த்துரோசனைகுலாவுவிளாம்பிசின்
வார்த்துவோமமவசம்புடன்வெள்ளுள்ளி
பார்த்துப்பதமாய்பாங்காயிடித்திடே. (௱௭௬)

இடித்துச்சூரணமெழிலாயெடுத்துமே
வடித்துசர்க்கரைவாகாய்கலந்துமே
மடித்துமண்டலமதிப்பாயருந்திட
துடித்துக்காசந்துடித்தோடிப்போகுமே. (௱௭௭)

சூலைபதினெட்டுக்கு மருந்து.

போகுஞ்சூலைபொருந்தும்பதினெட்டுக்
காகுஞ்சங்கனின்கருநியவேரொடுந்
தாகுங்காடியில்தனியவரைத்துமே
வாகுமண்டலமருந்தியேயுண்டிடே. (௱௭௮)

உண்டபோதுவுறைபும்பத்தியங்கேள்
அண்டவாயுவபானனிறுகலும்
கெண்டைவாதங்கெடியானசூலையும்
ஒண்டிடாமலுடலைவிட்டோடுமே. (௱௭௯)

(கற்பளவெண்ணெய்.)

ஒடுக்கற்பமுறையுமுறைத்திகேள்
நாடும்வீழியினத்தையிலைச்சூரி
காடுந்தைவேளைகருந்துகிலவாரை
பாடும்பிரமிபாங்காங்கிரந்தையே (௱௮௰)

கிரந்தைநாரிகெடியானபசலுடன்
காந்தைபுன்னைக்கஸ்தூரிமருந்துடன்
நிரந்தைவெள்ளுள்ளிசேர்க்கவசம்புசேர்
மரந்தகடுகுமாசக்காய்தூக்கிடே. (௱௮௧)

தூக்குஞ்சுக்குத்துடியாமொருபலம்
தாக்குந்திரிபலைதாளிசமறுபலம்
பூர்க்குங்காரம்புடமிட்டிருபலம்
கார்க்குமேனடையைகடுகெடுத்திடே. (௱௮௨)

எடுத்திடப்பாயெழிலாமணக்கெண்ணெய்
கொடுத்துஎண்ணெயில்குறிப்பாய்க்கலக்கியே

கண்டுமண்டலங்கணக்காயருந்திடில்
மிணடுயிருமல்மிரண்டோடிப்போகுமே. (௱௬௰)

போகும்பத்தியங்பொன்னுங்கண்ணியாகும்
ஆகுங்கத்திரியானவழுதலே
வாகுபச்சைப்பயறுவல்லாரையும்
பாகுவெல்லமும்பச்சடிதள்ளிமீட. (௱௬௧)

சூலைவாயு மேகத்திற்குத் தயிலம்.

தள்ளுசூலைதயிலமுரைக்கிறேன்
விள்ளுமேகொடிவேலிப்பருத்தியும்
எள்ளுமாவின்றனிசைந்தசங்கம்வேரும்
கொள்ளுக்காவேளைகொடியநாயகஞ்சேரோ. (௱௬௨)

சேர்த்துகாழிநீர்சிறக்கவேயெட்டொன்றாய்
பார்த்துக்குறுக்கிப்பதமாயிறக்கியே
நேர்த்துஎள்ளெண்ணெய்நோய்க்கலக்கியே
ஆர்த்துச்சரக்குஅளவாயெடுத்திடே. (௱௬௩)

எடுத்துமிளகுயெழிலாயொருபலம்
தொடுத்துச்சீரந்துடியாமிருபலம்
வடுத்துவாலுமிளகுவறுபலம்
கொடுத்துக்கோஷ்டங்குறிப்பாகத்தூக்கிடே. (௱௬௪)

தூக்கிச்சூரணமதுவளப்பொடித்துமே
தாக்கியெணணெயில்தயவாய்க்கலந்துமே
போக்கிலாமல்பொருந்தவிடித்துமே
நீக்குமண்டலம்நீளவாய்முழுகிடே. (௱௬௫)

ஒழுகும்போதுமுறியுஞ்சூலைநோவு
அழுதுங்கிரந்திவாராச்சிலந்திபோம்
ஓழுகுமவெள்ளையுறையுமரையாப்பு
நழுகுபுடலைகாடாதுவோடுமே. (௱௬௬)

சகலபிரமியத்திற்கு எண்ணெய்.

ஓடுமேகமுடலைவிட்டேகுதற்
காடுந்தேங்காய்க்கருதியபாலுடன்

நீடும்பொடுதலைசேர்ந்தகாயகமும்
கூடும்பிரமிக்குழிப்பாயளந்திடே. (௱௬௭)

அளந்துமாமணக்கெண்ணெயறுபலம்
வளர்ந்துவாவின்பால்வாகாயெழுபலம்
குளர்ந்துயெண்ணெயில்கூசாய்க்கலக்கியே
பளந்துமண்டலப்பாங்காயருந்திடே. (௱௬௮)

அருந்தும்போதுவலறியேமேகம்போம்
திருந்தரத்தமும்திகைத்துமேயோடிடும்
உருந்தும்வாயுவுடலைவிட்டேகிடும்
பொருந்துமாமுனிபுகழ்ந்துவுரைத்ததே. (௱௬௯)

சட்சிதசுகபேதி சூரணம்.

உரைக்கும்பேதியுறுதியாய்ப்பூட்டுதேன்
களைக்குஞ்சிவதைகடியபசும்பாலில
வரைக்குஞ்சீரமும்வாகாகக்காய்ச்சியே
குரைக்கும்வெயிலினில்குழிப்பாயுலர்த்திடே. (௨௱)

உலர்த்திச்சீனியுயர்ந்தசர்க்கரையும்
விலத்திசேயலமும்சேரக்கலந்துமே
குலத்துமாலையில்குணமாயருந்திடில்
பெலத்தசிதம்பிரண்டோடிப்போகுமே. (௨௱௧)

சகல விற்பிருதிக்கு சுகட்சிதமருந்து.

போகும்பிருதிபொருமல்வந்தோர்கட்கு
ஏகுஞ்சல்லியெறிலாணவேவறுடன்
பாகும்பற்படம்பாங்காயெடுத்துமே
ஆகுஞ்சூரணமனையாகவுண்டிடே. (௨௱௨)

உண்டுபத்தியமுற்றப்புளியாக
கண்டுவெண்ணீர்கலந்தன்னமுண்டிடு
திண்டுபுருதிதெறித்துமேயோடிடும்
கொண்டுதேரையன்குழிப்பாயுறைத்ததே. (௨௱௩)

உரைக்குமாத்தருணையுமருந்திடு
கரைக்குங்கரிப்பானகரிசாலைதானெடு

திரைக்குமெலுமிச்சம்சேரப்பழமெடு
அரைக்குமயச்சட்டி அன்பாகக்கிண்டிடே. (௨௱௪)

கிண்டிமூன்றுகெடியாமிருவேளை
அண்டிமாலையதிகாலைதன்னிலே
கொண்டுமண்டலங்குலாவியருந்திடில்
திண்டிமருந்துதிகைத்தோடிப்போகுமே. (௨௱௫)

போகும்பத்தியம்பொருந்தும்பருப்புடன்
ஏகுங்கஞ்சியிருவேளைதானுண்ணு
ஆகுமிஞ்சியரியதுவயல்கள்
பாகுமெல்லமும்பற்றுதலாகாதே. (௨௱௬)

(இலிங்கக்கட்டு.)

ஆகாதையாவவனியில்மாந்தர்க்கு
சகாலிங்கஞ்சுடுதியில்பூட்டுறேன்
வேகாத்தங்கம்விரும்பியேசுத்தியே
வாகாக்காரமவகையுடன்பூட்டிடே. (௨௱௭)

பூட்டிசேரன்பொருங்கலிடித்துமே
மாட்டியாவிசெய்மறையப்பொறுக்குமே
வாட்டித்திரியினில்வகாயெறித்துமே
மூட்டுக்கலைத்துமூளையாயெடுத்திடே. (௨௱௮)

எடுத்திடலிங்கமெழிலாயிறுகியே
கொடுத்திடநோய்குடியேகிப்போய்விடும்
அடுத்துமூன்றுநாளாற்வேளையுண்டிடு
தொடுத்தபத்தியந்தோன்றுப்பாகாதே. (௨௱௯)

சூலைக்கு கியாழம்.

தோன்றுசூலைதொடுத்திடுவாய்வுக்கு
கான்றுசெளன்கரியசிவன்வேம்பு
ஆன்றுகொன்றைபழகியவீரமும்
தீன்றில்லாவெள்ளறுகுமெடுத்திடே. (௨௱௰)

எடுத்துமேசமனெழிலாயிருபலம்.
அடுத்துமிளகுவழியசுக்குடன்

தொடுத்துசிரந்துடியாமருபலம்
வடுத்தகோஷ்டம்வலுவாயிடித்திடே, (உ௱௰௧)

இடித்தகல்விலெழுயபொடித்துமே
பொடித்துஇயாழம்பொருந்தகல்க்கியே
அடுத்துஇபமழகாறக்கியே
முடித்துமண்டலமுறைப்படியுண்டிடே. (உ௱௰௨)

உண்டபோதுவுதரியசூலைபோம்
கண்டமாலைகதரியேயோடிடும்
அண்டவாயுவுமபானனிறுகனும்
உண்டிடாமனுதரியேயோடிடும். (உ௱௰௩)

கிரந்தி அரையாப்புத் தடிப்புக்கு.

ஒடுங்கிரந்தியுற்றதடிப்புக்கு
நாடுங்கள்ளிநவிலுந்துளிர்பலம்
கூடுமிளகுகொடியவசம்புடன்
தேடுஞ்சுக்குதெளிவாயரைத்துண்ணே. (உ௱௰௪)

உண்ணும்போதுவறையுங்கிரந்திபோம்
நண்ணுந்தடிப்புநடாதொகாரும்
பண்ணுமருந்து ண்பாயருந்திடில்
எண்ணுமேனிதினைக்காதிருகுமே. (உ௱௰௫)

காதடைப்புக்குத் தயிலம்.

இறுகுங்காதிலெழிலாமடைப்புக்கு
உறுகுமிளகாயுற்றபலமெடு
மறுகும்பாண்டமதிப்பாயிடித்ததில்
குறுகுங்காழிநீர்குழிப்பாகக்காய்ச்சிடே. (உ௱௰௬)

காய்ச்சியெண்ணெய்கருதுமொருபலம்
ஆச்சுமிளகுயன்பாய்ப்பலமெடு
மூச்சிடாமல்புடமியேகுத்திடில்
போர்சுமேசெவிபுலுக்தயிலமே. (உ௱௰௭)

தயிலந்தன்னில்தரியாதிமிர்வாதம்
கயிலைசூலைகழர்சூலைவாயுவும்

வயிலேமேகமும்வாங்காச்சூலைகளும்
ஒயிலேமேல்வலியொழிந்தோடிப்போகுமே. (௨௱௰௮)

போகுமாந்தர்பொருமல்வயிற்வலி
ஆகுஞ்சுக்குவரைப்பலந்தானொடு
மேகுமாசுவெள்ளிலைதான்பொதி
பாகுமோரினிற்பாங்காயெறிகதிட்டே. (௨௱௰௯)

எரித்தசத்தமெழிலாமிதுமுறை
தரித்துமேதயிர்தன்னிலருந்திட
வரித்திரைச்சல்வலிகடுப்புமுதல்
தெரித்துப்போமெனச்செப்பினர்தேறனே. (௨௨௰)

தேறன்சொன்மொழிதிசையிலும்பொய்யாது
கூறவாமணக்கெண்ணெயொருபலம்
தீரக்காசுமேகட்டிசமனெடை
சேரவாவின்பால்சிறக்கவரைத்திட்டே. (௨௨௧)

அரைத்துத்துவரையன்பாயுருட்டியே
கரைத்துவென்னீரிற்காலையில்தானுண்ண
வரைதகபேதிவருகுமேமாந்தற்கு
முறைதப்பாமல்மொழிந்தனர்சித்தரே. (௨௨௨)

தலைவலிசன்னிக்கு நசியாக்கிராணப்புகை.

சித்தர்வாக்குதிசையிலும்பொய்யாது
சத்தசன்னியுறுதிதலைவலிக்
ஒத்தவோமம்கரியபெருங்காயம்
சுத்தசுக்குடன்துய்யமிளகொடே. (௨௨௩)

எடுத்துசாரமெழிலானசாம்பிராணி
அடுத்துசீரமழகியலிங்கமும்
கடுத்துமேகழல்கடியவார்த்தையும்
தொடுத்துசாரமுந்தான்றவரைத்திடே. (௨௨௪)

அரைத்துயெருக்கன்பாலினிலூட்டிடு
திரைத்துசீலையில்தீர்த்திதிருந்துமே
உரைத்தவாக்கிராணமுறுதியாய்த்தான்பிடி-
டரைத்தசன்னிப்பறந்தோடிப்போகுமே. (௨௨௫)

(கற்பூராதிக் குளிகை.)

போகுங்கற்பூரக்குளிகைபுகலுவேன்
ஏகுஞ்சாதிக்காயெழிலானபத்திரி
ஆகுந்தக்கோலமானலவுங்கபூம்
பாகுமிளகுபாங்ககாத்தூக்கிடே. (உஉ௬)

தூக்கும்வாலுமிளகுதுடிபலம்
தாக்குங்கோஷ்டந்தனியானகஸ்தூரி
பூக்குஞ்சந்தனம்புகலும்பச்சைபூரம்
ஆர்க்குங்குங்குமமடவாய்விராவெடே. (உஉ௭)

எடுத்துமேயிளநீரிலரைத்துமே
குடுத்துக்குன்றிமணிபோலுருட்டியே
தடுத்துத்தாமபூலந்தன்னிலருந்திடில்
கடுத்துப்பல்நோய்கடந்தோடியேகுமே. (உஉ௮)

எங்குங்காந்தியெழிலாம்வசியமாம்
தூங்குமந்தந்தொடந்தசன்னிமேகம்
பாங்குருஜைபதின்மூன்றுசன்னியும்
நீங்குமேனியுடலைவிட்டோடுமே. (உஉ௯)

(இ து வு ம து.)

(சதுர்முகச் சூ ர ண ம்.)

ஓடும்வேலியுயர்ந்தகிலப்பனை
நீடுஞ்சேங்கொட்டைதிகழுந்தசமதாய்
காடுந்தண்ணீர்க்கிழங்குசமனெடை
சாடுஞ்சீனிசரியாகச்சேர்த்திடே. (உ௩0)

சேர்த்துச்சூரணஞ்சிராய்கலந்துமே
பார்த்துதனிற்பதமாகநெய்யிற்
கார்த்துமண்டலம்நன்றாயருந்திடு
கார்த்துபத்தியங்கருதுபசும்பாலே. (உ௩௧)

பாலுமன்னம்பகர்ந்துவருந்திடில்
சூலைகுஷ்டஞ்சொரிவிஷமேகங்கள்
காலுங்குன்மங்கருதியவாயுவும்
ஏலும்பாண்டுமிறந்தோடிப்போகுமே (உ௩உ)

(பல்லுப் பொடி)

போகுந்தந்தவியாதிக்கொருமுறை
ஆகுஞ்சினமாக்குடன்துத்தமும்
தாளூந்தான்றிதனிக்கடுக்காயுடன்
வாகுமாசிக்காய்வாகாய்விரானெடே. (௨௱௩)

எடுத்துதும்பமெழிலாயணைத்துமே
கடுத்துமண்டலங்கருதியேதேய்த்திட
அடுத்ததந்தமசையும்பல்லுக்குத்து
முடுத்தப்பாமல்முடுகியேயோடுமே. (௨௱௪)

வாயுவு விக்கல் சோகைக்கு மருந்து.

ஓடும்வாயுமுறையும்விக்கிலுக்கு
நாடுஞ்சுக்குநவிலுமிளகுடன்
தேடும்ரோசனைதேர்ந்தகடுக்காயும்
கூடியொன்றாய்குலாவியிடித்திடே. (௨௱௫)

இடித்துச்சூரணமெழிலாய்ப்பணவெல்லம்
அடுத்துயாவின்பாலன்பாகக்காய்ச்சியே
கடுத்ததேனெய்யில்களிப்புடனுண்ட
தொடுத்தவயிற்வலிதொடர்ந்துதாணீங்குமே. (௨௱௬)

நீங்குஞ்சோகைநிகழும்பொருமலும்
நீங்குவிக்கல்திமிர்கிருமிதோஷம்
பாங்குசூலைபகருமேகசலம்
வீங்குரோகம்வெளிவிட்டேகுமே. (௨௱௭)

(திரிகடு கெண்ணெய்.)

ஏகுமேதிரியெழிலாங்கடுகெண்ணெய்
பாகுசுக்குப்பகருமொருபலம்
வாகுதிப் லிவாகாயிருபலம்
தாகுமிளகுத்தனிப்பலமேயிடே. (௨௱௮)

எடுத்துக்காயமெழிலானவெள்ளுள்ளி
கடுத்துவசம்புகருதயொருபலம
தொடுத்துவோமந்துடியாய் றுபலம்
அடுத்துச்சாம்பிராணியாறுபலமெடே. (௨௱௯)

எடுத்துமேனிச்சாறெழிலாயரைத்துமே
தொடுத்தக்கடுகுதோன்றும்பதத்தினில்
அடுத்துவிசனையன்பாகப்போற்றியே
வடித்துமேபதம்வாகாயிறக்கிடே. (௨௪௰)

இறக்கியெண்ணெயெழிலாகப்பூசிடில்
குறக்குங்கைகால்குடைச்சல்வலிதீரும்
நிறக்குமேவலிதீர்ந்தகாதிரைச்சல்
பறக்குமென்றல்லோபாடினேன்தேரனே. (௨௪௧)

மகா பஞ்சீகரண செந்தூரம்.

தேரன்கூர்மொழிதிசையிலும்பொய்யாது
வேறுசெந்தூரம்விரும்பியுரைக்கிறேன்
கூறுதங்கங்குறிப்பாயொருபலம்
தேறவங்கந்திறமாயெடுத்திடே. (௨௪௨)

எடுத்திடுரவியெழிலாமொருபலம்
தொடுத்திடுமதிதோன்றவரைப்பலம்
அடுத்திடுநாகமன்பாயிருபலம்
கடுத்திடுந்தாரங்கடியப்பலந்தூக்கே, (௨௪௩)

தூக்குகெந்தந்துடியாம்விராகனுற்
தாக்குபொற்றலைச்சாற்றாலரைத்துமே
நீக்குகுப்பியில்நெகிழப்பொடித்துமே
போக்கில்லாமல்பொங்கவெரித்திடே. (௨௪௪)

எரித்துச்செந்தூரமெழிலானதேனி
கரித்தமேனிகரியநிறமாறும்
முரித்தாத்தமுறித்துசிவந்துமே
தரித்ததங்கமேபோல்தானிறமாகுமே. (௨௪௫)

ஆகும்வெள்ளியிலன்பாகயீந்திட
ஏகுமாற்றுறுளெழிலானவாணிக்கு
பாகுதங்கமபார்ந்துசரியடை
வாதுசிவணம்வாகச்செய்திடே. (௨௪௬)

காமாலை சோகைக்கு லேகியம்.

செய்துசோகைசிறந்தகாமாலைக்கு
எய்துஞ்சுக்குமெழிலாமிளகுடன்

போடசெந்தூரம்பொருந்தும்பணவிடை
நீடவெண்ணெயில்நேர்மையாயுண்டிட
கூடரோகங்குஷ்டரோகங்கிரந்தி
ஓடகுலையொழிந்துதானோடுமே. (௨௧௨)

ஓடும்கஷ்டமுறையும்லிங்கப்பற்று
தேடுமாலைதெறிக்குமறையாப்பு
நீடுங்காசம்நெகிழும்விற்பிருதி
மூடுஞ்சன்னிமுறையமிட்டேங்குமே. (௨௧௩)

சகலரணங்கட்கு ரஞ்சிதத்தயிலம்.

எங்கும்நோச்சியெழிலாமுஞ்சிவேர்
இங்கில்லாததிரிகடுவிழுதியும்
தாங்குபாண்டந்தனியவிடித்துமே
பாங்குதயிலம்பாங்காயிறக்கிடே. (௨௧௪)

இறக்கித்தயிலமெழுச்சிவிற்புருதி
கறக்குமாலைகடியவளையாப்பு
உறக்குவாழைவுறையுங்குழிவாழை
பறக்குமென்றல்லோ பாடினன்தேறனே. (௨௧௫)

நீரில் எரிச்சல் கண்டால்.

தோன்வாங்குந்திசையிலும்பொய்யாது
வேறநீரிலாவெகுளுமெரிச்சலுங்
கூறமருந்துகுறிக்குங்கட்டுக்கொடி
நீறாசகன்னிப்பிரமாணமேடே, (௨௧௬)

எடுத்துமோரில்வில்பதந்தனுடன்
கடுத்தசிரங்கடியவெல்முடன்
பொடித்தூண்டுபொருந்தவிராவொடை
கடுத்தநீனிகலங்குவருந்திடே, (௨௧௭)

அருந்தும்போதவருகும்நீரெரிவு
பொருந்துமேனியுடைத்துமேயோடிடும்
வருந்துஞ்சுருக்குவாகானவெள்ளையுமே
முருந்தாததமுமுன்னெட்டுவோடுமே (௨௧௮)

மகாபாங்கிப் பட்டை பதங்கம்.

ஓடும் பாங்கியுற்றபதங்கமும்
சூடுஞ்சூரணந்தாக்கியொற்பலம்
நீடுங்கையானிகழும்பொற்றலைச்சாற்
போடுங்குப்பிச்சாற்போற்றும்பசும்பாலே. (௨௬௯)

பாவில்சாயில்பதமாயவித்துமே
நாவில்செங்ககம்நவிலுமொருபலம்
மூவிலிங்கமுனையாமிருபலம்
தோவில்லாமல்சொகுசாயவித்திடே. (௨௭௰)

எடுத்தாவியிலெழிலாயுலர்த்தியே
அடுத்துக்கணேசனையன்பாகப்போற்றியே
கொடுத்துமண்டலங்குணமாயருந்திடில்
கடுத்தமேகம்நவின்றோடிப்போகுமே. (௨௭௧)

(திரும் வியாதி.)

போகுங்கறப்பொருத்துமவெள்ளைகுலை
ஏகுமாணங்கள்எதிர்க்குஞ்சிரங்குகள்
வாகுங்குஷ்டம்வரையுஞ்செந்தாழையும்
நோகுமாணங்கள்நொருங்கியேவோடுமே. (௨௭௨)

ஓடும்பத்தியப் பட்டு புளியாகா
நீடுமண்டலம்நேரமையாயுண்டிடில்
மூடுவியாதிமுறைறகெட்டோடிடும்
வீடுவிட்டுவெளிப்படும்வெங்கதே. (௨௭௩)

மகாவல்லாதி தயிலம்.

வெந்தமோசெருப்பிரும்புவல்லாதியை
காந்தழிஞ்சிக்கருதாழைக்கட்டையும்
நீந்தவேம்பின்திகழுமெட்டிபுடனை
போந்தபுன்னைக்கிலையமன்தாக்கிடே. (௨௭௪)

தாக்குமேசிவன்வேம்புஞ்சம்பொடை
தாக்குமேசலைக்கள்ளிமலையூறவை
போக்குதயிலம்பொருந்தயிறக்கியே
வாக்குதப்பாமல்மண்டலங்கொண்டிடே. (௨௭௫)

கொண்டபோதுகொடிதானசூலையும்
அண்டவாயுவபானனிறுகலும
ரெண்டைவாதகிரந்தியனாயாப்பு
ஓண்டிடாமலுடலைவிட்டோடுமே. (உஎசு)

ஓடுகுன்மமூறையுமிருமலும்
நீடுவாதம்நெருங்கியகாசமும்
கூடுவிக்கல்குமித்திடுரோகமும்
வீடுவிட்டுவெளிப்பட்டுநீங்குமே. (உஎஎ)

(இடிவல் லாதி.)

நீங்குமேயிடிநிகழும்வல்லாதியை
பாங்குசேங்கொட்டைபதியப்பலமொடு
நீங்குமாவின்றிரளுஞ்சாணத்தினில்
வாங்குமூன்றுநாள்வாகாயூறவையே. (உஎஅ)

வைத்துமேசுல்லிவாகாயிடித்துமே
மைத்துமெள்ளவிதப்பொடித்திடு
கத்துக்கொப்பரைக்கருதுந்தேங்காயுடன்
சத்துப்போகாமதனியவிடித்தேடே. (உஎகூ)

இடித்துப்பட்டைபெழிலாமமுக்குரா
கடுத்தமூலங்கஸ்தூரிகருஞ்சீரம்
வடுத்தவாலுழுவாங்குந்தூராசாணி
எடுத்தவெற்றிலைஏந்துங்கடுக்காயே. (உஅ0)

காயுந்திப்பிலிகடியகோஷ்டமுடன்
தோயுஞ்சாக்குத்துகளசமனொடை
காயுஞ்சூரணங்கல்லுரலிட்டுமே
பாயுமயனம்பாங்காயிடித்திடே. (உஅக)

இடித்துமேசகெந்திகற்பூரமும்
வடித்துமேசமன்வாகாயெடுத்திடு
மூடித்துவெல்லாமூனேயாய்க்கலந்திடு
கடித்துமண்டலங்கடியவருந்திடே. (உஅஉ)

அருந்தும்போதுமேவாராக்கிரந்தியும்
திருந்துக்குஷ்டமூர்தெறித்திடுசூலையும்

வருந்துமேகம்வளையுமறையாட்டுக்
குருந்துகுன்மமுமகுடியேகிப்போகுமே. (௨௮௩)

போகும்பத்தியம்பொருந்துமிறைச்சியும்
ஆகுமோருமருமைமாறுசெய்யும்
டாகுவல்லாரைபசும்பொன்னாங்காணியும்
ஏகும்பச்சைசெயெடுத்துப்பொசித்திடே. (௨௮௪)

சகல மேகங்களுக்கு கெந்திரசமெழுகு.

பொசித்தமேகம்பொருந்துபறப்பதற்
கசித்ததாரங்கடுங்காரகாந்தமும்
வசித்ததுத்தங்கவிலுமிர்தாருடன்
வசித்தபூரமும்வாகாயத்துரிசெடே. (௨௮௫)

எடுத்துச்சுக்குயெழிலாணவோமமும்
கடுத்தமஞ்சள்கடியவரத்தையும்
தொடுத்தகோஷ்டம்துவளும்வாலுளுவை
அடுத்தசாதிக்காயன்பாயேலமெடே. (௨௮௬)

ஏலஞ்சோம்புஎடுத்திடுசீரகம்
கோலக்கார்போகங்கொடியமிளகுடன்
வாலம்வசம்புவகுக்குமாசக்காயும்
தாலலவங்கந்தனிவாய்விளங்கமே. (௨௮௭)

விளங்குந்தேசாவாரந்தசெங்கொட்டையும்
களங்குஞ்சீரங்கருஞ்சீரங்கந்தமும்
புளங்குத்தேக்குபுகலுந்தாளிசமும்
அளங்குபடத்திரியன்பாயெட்டியெடே. (௨௮௮)

எட்டிபுந்திரியேகுந்தேற்றான்விதை
கட்டிப்பூண்டுகடியசொள்ளெள்ளுடன்
வெட்டிதேங்காய்விரையுஞ்சங்கனுடன்
கொட்டிவேம்பிகுமிப்பாய்நயன்தூக்கே. (௨௮௯)

தூக்கியண்டந்துடியாம்வெண்கருவை
தாக்குமுமாவில்கரியவிடித்துமே
போக்கில்லாமல்பொருந்தசிமிழில்வை
வாக்கிலீசனைவந்தித்தேயுண்டிடே. (௨௯௰)

(நீரும் வியாதி.)

உண்டபோதுமுறையும்வெடிசூலை
துண்டமேகந்துடியாமிடிசூலை
அண்டசூலையழுந்தும்வாதசூலை
கண்டமாலைகதிகெட்டுவோடுமே. (உ௯௧)

ஓடுமேகமுறையுங்குடைச்சலும்
நீடுமேகரம்நெருங்குங்குஷ்டங்களும்
கோடுநோயுங்குலைநோய்சிரங்குகள்
ஆடுகுன்மமலரியேநீங்குமே. (உ௯௨)

தீங்குலிங்கம்நெருங்கியயோனிநோய்
பாங்குசிலந்திபருத்தகிரந்தியும்
தீங்குபுண்ணுந்திமிர்தடிப்புமாறும்
வாக்குமூலமுவணாங்தோடிப்போகுமே. (உ௯௩)

போகும்பத்தியம்பொருந்தும்பச்சைப்பயர்
ஆகுநெய்யுமரும்பசுப்பால்தயிர்
ஊகும்வெள்ளாட்டிறைச்சியுப்புக்கண்டம்
காகுங்கத்திரிகவிலவருந்திடே. (உ௯௪)

சூதசெந்தூரம்.

அருந்தசெந்தூரமறையுறேன்மாந்தர்க்கு
திருந்துகெந்தகமதிரட்டிரசமுடன்
பொருந்துசமனெடைபோற்றுங்கலுவத்தில்
வருந்துசித்தாமணக்கெண்ணெயாட்டிடே. (உ௯௫)

ஆட்டிமெழுகுயன்பாய்த்திரட்டியே
கூட்டிப்பட்டுக்குலாவிப்பொதிந்துமே
நாட்டுவேலிகவிலுங்கொடிவேலி
போட்டுமூடிப்பொதியப்புடமிடே. (உ௯௬)

இட்டுச்சேந்தூரமிரக்கியெடுத்துமே
கட்டுதேனில்கலந்துவருந்திட
ஒட்டுநோயுமுடலையுட்டேகிய
விட்டுப்போமெனவெண்குருசெப்பினார். (உ௯௭)

மகாகெந்தக ரசாயனம்.

செப்புமாக்கெந்தரசாயனம்
ஒப்புங்கெந்தமுறைக்குமறுபலம்
தப்பில்லாமல்தனிப்பசும்பாலிலும்
வெப்பில்லாமல்விரைந்துரிலைசெய்யே. (௨௯௮)

செய்துசெம்பிறந்தமணல்தனில்
எய்துமேபுடமெழிலாய்ப்பொதிந்துமே
கொய்துமேகுமரேசனைப்போற்றியே
வெய்துமண்டலம்விரும்பியருந்திடே. (௨௯௯)

அருந்தும்போதுமனையுமறையாப்புக்
குருந்துரோகங்குழிப்பானவெள்ளையும்
திருந்துவெட்டைச்சிறந்தரணங்களுடம்
பொருந்துகுஷ்டம்புறப்பட்டுவோடுமே. (௩௱)

ஓடும்பத்தியமுற்றுபுளியாகா
நீடுபாலும்நறுநெய்யோடுமுண்ணு
ஏடுதயிருமெழிலாகவுண்டிடு
கோடுமண்டலங்குழிப்பாகவுண்டிடே. (௩௱௧)

(வேறு தண்ணீர்.)

உண்டுமேனியுறும்புவலிநீங்க
கண்டுகொச்சிகுடியதோர்தாழையும்
பிண்டுநீரில்மிதக்கவேகாய்ந்தபின்
இண்டிவாயுதிசைத்தோடிப்போகுமே. (௩௱௨)

சகல சுரங்களுக்குக் கியாழம்.

போகுமேசுரம்பொருந்துமுடலைவிட்
டாகுந்தூதுவளைகண்டங்கத்திரி
நீகுவேம்புசிலவேம்புக்கோடையும்
வாகுபடகம்வகுத்தக்கோடையெடே (௩௱௩)

எடுத்துசிந்திலெழிலாணமூட்டியும்
கடுத்தக்காந்தங்கருவேம்பின்மூலமும்
தொடுத்தசெந்தொட்டிதோன்றுமுசுக்கையுங்
கொடுத்துபெய்ப்புடல்கூறுந்தம்பைக்கூட்டே. (௩௱௪)

கூட்டுந்தாளிகுறிப்பாய்சமனெனடை
நீட்டுமூலவில்நோயிடித்துமே
காட்டுஞ்சாக்குசருகியேசேர்ப்பதற்
கோட்டந்தேக்குகுறிப்பாகத்தூக்கிடே. (௧௱௫)

தூக்குதாளிசந்தோன்றுபத்திரியும்
தாக்குசங்குடன்தனிபலவங்கமும்
நீக்கித்தோலைநெருங்குஞ்சதாவேலி
போக்குமரத்தைநபொருந்தநிறுத்திடே. (௧௱௬)

நிறுத்துதிப்பிலிநெருந்தேசாவரம்
அறுத்துவொன்றுபழகாயிடித்துமே
வறுத்துப்பாண்டமறுபடிநீரினில்
கறுத்தூக்கியாழங்கடியவிறக்கிடே. (௨௱௭)

இறக்கிமூன்றுயிருவேளைதான்குடி
உறைக்குமுப்புபுளிபுகைதள்ளிடு
திறக்கமாகவேதிரவருந்திடில்
பறக்குமேசுரம்பகர்ந்தனர்தேறனே. (௧௱௮)

(வேறு - மருந்து.)

தேறன்வாக்குத்திசையிலும்பொய்யாது
கூறக்கியாழங்கொடிதாயுரைக்கிறேன்
காறதேக்குசுடியமதூரமும்
தாறசீரந்தனிவாய்விளங்கமே. (௧௱௯)

விளங்குமாஞ்சில்விரும்புங்கிராம்புடன்
களங்குபத்திரிகரியதாளிசமும்
வளங்குமிளகுவாகாய்விடையமும்
துளங்குமேயிவைதோன்றச்சமனெடே. (௧௱௰)

எடுத்துச்சூரணமெழிலாமிஞ்சிரசம்
அடுத்துச்சுரசமன்பாகமண்டலம்
கொடுத்துமேயிருவேளையருந்திடில்
மிடுத்தவுடசுரமிரண்டோடிப்போகுமே. (௧௱௰௧)

(கண்டா விழ்தம்.)

போகுங்கண்டாவவிழ்தம்புகட்டுதற்
காகும்வெள்ளிக்கருதுபவளமும்

